# வெட்டவெளி



சுவாமி பிரபஞ்சநாதன்

# வெட்டவெளி

========================

பிரபஞ்சம் என்பது *‘ஒளியிலிருந்து ஐந்து பூதங்களாக விரிந்துக் கொண்டிருக்கும்’* ஒரு இயக்கம். அதாவது, ஒளியிலிருந்து விரிந்த அல்லது விரிந்து கொண்டிருக்கும் ஒன்றிற்கே **‘பிரபஞ்சம்’** என்று பெயர்.

**'பிரபஞ்சம்'** எனும் சொல் சமஸ்கிருதச்சொல். அதன் பொருள் *‘நன்கு விரிந்தது’* என்பதே. நன்கு விரிந்த அல்லது விரிந்து கொண்டிருக்கும் அமைப்பைக் குறிக்கும் சொல்லே **'பிரபஞ்சம்'** என்றும், தமிழில் **“பேரண்டம்”** என்றும் கூறப்படுகின்றது.

பிரபஞ்சத்தை ஒருபோதும் இந்த ஊனக் கண்களால் முழுமையாகப் பார்த்துவிட முடியாது. அறிவியல் ஆய்வுகள் கூட, அனுமானத்தினால் மட்டுமே அதனை வரையறுத்துக் கூறுகின்றது.

ஆக, பிரபஞ்சத்தின் வடிவம் இப்படித்தான் இருக்கும் என்பதைக் கூட, முடிந்த முடிவாக விஞ்ஞானத்தினால் உறுதி செய்ய முடியாததிற்குக் காரணம், அது விநாடிக்கு, விநாடி விரிந்துக் கொண்டே இருக்கின்றது.

அத்தகைய இந்த பிரபஞ்சத்திற்கு ஆதாரம் ஆகவும், அடிப்படையாகவும் இருப்பது **“வெளி”** ஆகும்.

இங்கு ‘**வெளி**’ என்று கூறுவதை பஞ்ச பூதங்களிலுள்ள ‘**ஆகாயம்**’ என்று தவறாகப் புரிந்துக் கொள்ளக் கூடாது.

இதனை **“வெட்டவெளி”** எனத் தமிழ் சித்தர்கள் மிகவும் வெளிப்படையாகக் கூறுகின்றனர்.

நாம்தான் அதைப் புரிந்துக் கொள்ள முடியாத விழிப்புற்ற ‘**புத்தி சக்தி**’ அற்றவர்களாக இருக்கின்றோம்.

அந்த வெட்டவெளியையே, *“இருப்பு”*, *“இறைவன்”*, *“மெய்ப்பொருள்”*, *“ஆதிமூலம்”* எனப் பலவாறு அழைக்கப்படுகின்றது.

இந்த வெட்டவெளியிலிருந்து வெளிப்பட்டதே இந்த பேரண்டங்கள், அண்டங்கள், விண்மீன் குடும்பங்கள், சூரியக் குடும்பம், பூமி, உயிரினங்கள், மனிதன் என எல்லாமே.

வெட்டவெளியில் இருந்து ‘**பிரபஞ்சம்**’ தோன்றியதை பெருவெடிப்புக் கொள்கையின் மூலமாக அறிவியலாரும் ஒப்புக்கொள்கிறார்கள்.

ஆனால் பெருவெடிப்புக்கு சில வினாடிகள் முன்பு, என்ன நிகழ்ந்திருக்கும் என்பதை? அறிவியல் இன்றும் ஆய்வாக மட்டுமே வைத்திருக்கின்றது.

மெய்ஞானமோ முடிந்த முடிவை ‘**சித்தாந்தம்**’ ஆக்கிச் சிறப்பாகத் தந்திருக்கின்றது.

பேரண்டப்பெரு வெளியை மிகவும் எளிமையான வழியில் புரிந்து கொள்ளலாம்.

எவ்வித அசைவும் இல்லாதிருக்கும் வெட்ட வெளியில், திடீரென ஒரு அசைவு நிகழ்கிறது.

அந்த அசைவு ஏற்படுவதற்கு, எந்த இயக்கம் காரணமாக இருந்ததோ, அந்த இயக்கமே இந்த மொத்தப் பேரண்டம் முதற்கொண்டு, அனைத்தும் இயங்குவதற்கு அடிப்படையாக இருக்கின்றது.

வெட்டவெளியின் ஒரு புள்ளியில் நிகழும் அழுத்தம் காரணமாக வெடிப்பு உண்டாகி, அந்த வெடிப்பின் அசைவால், மொத்த அண்டங்கள் விரிகின்றன.

இதை, சமயத்தின் வாயிலாக சற்று ஆழமாக விளங்கிக் கொள்ள முயற்சிக்கலாம்.

அதாவது, வெட்டவெளி, பேரண்டம் போன்றவற்றை சிவம், சக்தி எனும் தெய்வங்களாக சமயம் வகுத்துள்ளது.

‘**சிவம்**’ என்பது வெட்டவெளியைக் குறிப்பது.

‘**சிவம்**’ என்றால் உயிருள்ளது. ‘**சவம்**’ என்றால் உயிரற்றது என நாமறிவோம்.

சிவத்தை நுட்பமாக சிந்தித்தால் இயக்கமற்று, ஆனால் உயிருள்ளதாகக் காட்சியளிக்கும். சவத்தை இன்னும் நுட்பமாக சிந்தித்தால் உயிரற்றதோடு அசைவற்றது எனத் தெரிந்துக் கொள்ளலாம்.

அதாவது, இயக்கமில்லாமல் உயிரோடு இருக்கும் வெட்ட வெளியே ‘சிவம்’ எனப்படுகின்றது.

திடீரென வெளியில் நிகழும் அழுத்தமே வெடிப்பு அல்லது விரிவாகிறது என்று ஏற்கனவே பார்த்தோம்.

அந்நிலையில் **‘சிவம்’** உயிருள்ள இயக்கமாக மாறுகிறது. உயிருள்ள, இயக்கமற்ற, வெட்ட வெளியான **‘சிவம்’** இயக்கத்திற்கு வரும் போது **‘சக்தி’** என அழைக்கப்படுகின்றது.

இன்னும் எளிமையாகச் சொல்ல வேண்டு மானால், உயிருள்ள, இயக்கமற்ற, வெளியைச் **‘சிவம்’** என்றும், உயிருள்ள, இயக்கங்கள் நிகழும், வெளியை **‘சிவசக்தி’** என்றும் கொள்ளலாம்.

**‘சிவசக்தி’** என்பது, அசையாத சிவத்தையும், அந்த சிவத்திடமிருந்து வெளிப்பட்ட, அசையும் சக்தியையும் ஒன்றாக இணைத்து **‘அர்த்தநாரீஸ்வரன்’** என்ற ஒரு கடவுளை உருவகப்படுத்தி சமயம் வழிபடுகின்றது.

வெட்டவெளியின் ஒரு சிறுபுள்ளியில் திடீரென நிகழும், இந்த அசைவால் உண்டாகும் சத்தமும் (நாதம்), வெளிச்சமும் (ரூபம்) பேரண்டத்திற்கான தோற்றப்புள்ளிகள்.

அதாவது, ஒரு பேரணுவில், நடந்த வெடிப்பில், பல்வேறு அணுக்களாக இந்த பேரண்டம் வெளிப்பட்டது.

அந்த வெடிப்பில் (அசைவில்) முதலில் ‘**ஒலி**’ தோன்றி, அதன்பிறகே ‘**ஒளி**’ தோன்றியதை அறியலாம்.

‘**நாதம்**’, ‘**விந்து**’ என இரண்டு சொற்களை சமயத்தில் தோற்றக் குறியீடுகளாகக் குறிப்பிடுவர்.

*‘நாதம்’* என்பது **“ஒலி”**. *‘விந்து’* என்பது **“ஒளி”**.

*“நாத விந்து கலாதி நமோநம”* எனும் அருணகிரி நாதரின் ‘**திருப்புகழ்**’ ஒரு சான்று. *‘நாதம் (ஒலி)’* முதலிலும், *‘விந்து (ஒளி’)* பிற்பாடும் என்பதாகவே அப்பாடலும் கூறுகின்றது.

நம்முடைய மக்களால் ஏற்படுத்திக் கொள்ளப் பட்ட மதங்கள் அவ்வொலியை ‘**ஓம்**’ என்றும், ‘**ஆமென்**’, ‘**ஆமீன்**’, என்றும் கூறுகின்றார்கள்.

சமயத்தில் இறைவனை ‘**நாதன்**’ என்றே குறிப்பிடுகிறார்கள். *‘சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டி, சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் காட்டி’* என்றும், *‘நாதன் நாமம் நமச்சிவாயவே’* எனக்கூறுவதையும் இங்கு நினைவில் கொள்ளவும்.

ஆக பிரபஞ்சத்தோற்றத்திற்கு அடிப்படையான நாதத்திற்கு (ஒலிக்கு) மூலமான பொருளைச் சுட்டும் குறியீடு நாதன்.

அடுத்து, வெளிச்சத்தை ‘**சோதி**’ எனக் குறிக்கலாம்.

முதலில் வெட்டவெளி மட்டுமே இருந்தது, அந்த வெட்டவெளியில் உண்டான அசைவில், அதாவது, அந்த பெரு வெடிப்பின் போது, எழுந்த ஓசையை **‘ஓம்’** என்றும், அதன் பிறகு வெளிப்பட்ட வெளிச்சத்தை **‘சோதி’** என்றும் அறியலாம்.

அடுத்து, வெட்டவெளிக்குள் நிகழ்ந்த பெருவெடிப்பின் இயக்கத்தின் துவக்கத்தில் வெளிப்பட்ட (சப்தத்தை) **‘ஓம்’** என்ற **‘ஒலி’** யைச் சுட்டி நிற்பவர் **‘விநாயகர்’** ஆவார்.

அவருக்கு வடிவைக்கப்பட்ட வடிவமும் **‘ஓம்’** என்ற அக்ஷரம் போன்றே காணப்படும். விநாயகரின் திருவுருவை வலது காது முதல் தொடங்கி தலையை சுற்றி வளைத்து இடது காது வரை கொண்டு வந்து தொங்கும் தும்பிக்கை வரை கொண்டு வந்து சுழித்தால் **‘ஓம்’** என்ற பிரணவ வடிவம் புலப்படும். அதனால் அவர் நாத முதல்வர் எனப்படுகின்றார்.

அடுத்து, ஒலியைத் தொடர்ந்து உதிக்கும், ஒளியைச் சுட்டி நிற்பவர் **‘முருகன்’** ஆவார். முருகனின் பிறப்பும் சிவனின் நெற்றிக் கண்களில் இருந்து வந்த ஒளியின் மூலமாகவே நிகழ்ந்தது என புராணக் கதைகளில் படித்திருக்கின்றோம்.

ஆகவே, வெட்டவெளியில் இருந்து வெளிப்பட்ட **‘ஒலி’** - யை *‘விநாயகர்’* எனவும், **‘ஒளி’** - யை *‘முருகன்’* எனவும் கொண்டு சமயம் வழிபடுகின்றது.

*“ஆதிநடு அந்தம் கடந்த நித்தியானந்தப் போதமாய் பந்தம் தண்ந்த பரஞ்சுடராய்”* எனும் குமரகுருபரரின் கந்தர்கலி வெண்பா வரிகளைக் கவனியுங்கள். *“சோதிப்பிழம்பதோர் மேனியாக”* எனும் கந்தபுராண வரியையும் நினைவு கூர்வோம். *“ஓங்காரத்து உள்ளொளிக்குள்ளே முருகனுருவங் கண்டு”* என்று கந்தர் அலங்காரத்தில் அருணகிரிநாதர் குறிப்பிடுவதைக் கவனியுங்கள்.

‘**சிவசக்தி**’ என்பது, இந்த மொத்த பிரபஞ்சத்தையும் இயக்கிக் கொண்டிருக்கின்ற இயக்க ஆற்றலை **சிவன், சக்தி** எனவும், அந்த சிவசக்தியிலிருந்து வெளிப்பட ‘**ஒலி**’, ‘**ஒளி**’ ஆற்றல் களை அவர்களின் இரண்டு குழந்தைகளாக ‘**விநாயகர்**’, ‘**முருகன்**’ எனவும் அறியாமையில் உள்ள பாமர மக்களுக்காக சமயம் வடிவமைத்துக் கொடுத்தது.

நாம் நம் அறியாமையினால், அந்த வடிவமைக்கப்பட்ட உருவங்களை மட்டுமே பிடித்துக் கொண்டு, அந்த உருவங்களுக்கு பின்னால் ஒளிந்துக் கொண்டிருக்கின்ற உண்மையான ‘**இருப்பு**’ எது என்பதை அறிய மறுக்கின்றோம்.

இந்த ‘**இருப்பு**’ என்பது, வழிபடுகின்ற கற்சிலைகளில் மட்டும் இல்லை. படைக்கப்பட்ட ஒவ்வொரு பொருள்களிலும், உயிர்களிலும் உள்ளேயும், வெளியேயும் இருக்கின்றது. அதை எப்பொழுது நாம் உணருகின்றோமோ, அப்பொழுதே நாம் நம்மை அறிந்தவர்களாகின்றோம்.

இதை விடுத்து, சிவன், சக்தி, விநாயகர், முருகன் எனும்போது, அதனை ஆற்றல்களாக புரிந்துக் கொள்ளாமல், ஆட்களாகப் புரிந்துக் கொள்ளும் அபக்குவ நிலையே, தன்னை அறிவதற்குத் தடையாக இருக்கிறது.

வெட்டவெளியின் ஓரிடத்தில் திடீரென நிகழும் அசைவு அல்லது விரிவே பிரபஞ்சத் தோற்றத்துக்கான அடிப்படை நிகழ்வு எனும் பொழுது, அவ்வாறு நிழந்த அந்த அசைவு படைக்கப்பட்ட அனைத்திலும். இருக்கின்றது.

அந்த அசைவை '**இயக்கம்**' என்று விஞ்ஞானம் கூறுகின்றது. அந்த அசைவை '**உயிர்**' என்று மெய்ஞ்ஞானம் கூறுகின்றது. இதுதான் வித்தியாசம்.

அந்த உயிரின் '**இருப்பை**' படைக்கப்பட்ட ஒவ்வொருப் பொருளிலும் உற்று கவனித்தால், அதை நாம் உணரலாம்.

விஞ்ஞானத்தை '**அறிவு**' எனக் கொண்டால், மெய் ஞானத்தை '**அனுபவம்**' எனக்கொள்ளலாம்.

விஞ்ஞானம் தான் கண்டறிந்த அறிவை தனிப்பட்டதாக மாற்ற முயல்கிறது. அந்த அறிவை, அனுபவத்தைப் பொதுப்படையானதாக உணரச் செய்வது மெய்ஞானம்.

பொருளைச் சார்ந்து வாழ்பவர்களுக்கு வேண்டுமானால், புறத்தில் வளர விஞ்ஞானம் அவசியமானதாக இருக்கலாம். அருளைச் சார்ந்து

வாழ்பவர்களுக்கு, அகத்தில் வளர மெய்ஞானம் அவசியம்.

ஒருவனை அவனிலிருந்து விடுவித்து, வெட்டவெளியில் சிறுதுகளாக உணரச் செய்வதே உண்மையான **“மெய்ஞானம்”** ஆகும். மற்றவைகள் எல்லாம் எப்படிப்பட்ட புனிதமான விசயங்களைப் புரிய வைத்தாலும், அவைகள், அவனைப் பந்தப்படுத்துகின்ற **“பொய்ஞானம்”** ஆகும்.

@@@@@ **ஓம் தத் சத்!** @@@@@